# சங்கல்ப விளக்கம்



ஸ்ரீ வேத வ்யாஸ பகவான்

அசதுர் வதனோ ப்ரம்ஹா த்விபாஹு : அபரோ ஹரி: |
அபால லோசன : சம்பு : பகவான் பாதராயண: ||

ஸ்ரீகாஞ்சி காமகோடி ஜகத்குரு சங்கராசார்ய ஸ்வாமிகள்
ஸ்ரீஸ்ரீஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி ஸ்வாமிகளின்
பீடாரோஹண சதாப்தி விழா வெளியீடு

# சங்கல்ப விளக்கம்

தொகுப்பு

ஸ்ரீமான் R. சந்திரசேகர சர்மா

(பெரம்பூர் சேகர்)

வெளியீடு :

வேததர்ம சாஸ்திர பரிபாலன சபை

[Regd 1942]

உபயம் : ஆதம்பாக்கம் கைங்கர்ய சபா சென்னை - 88

05-02-2006

**கிடைக்கும் இடங்கள்:**

1. R. சந்திரசேகர சர்மா
ஸ்ரீ சங்கர மடம்
ப.எண் 90/2 புது எண் 153,
பராக்கா ரோடு, கெல்லீஸ்,
சென்னை - 600 010.
போன் : 26612262

2. ஸ்ரீ சங்கர கேந்திரம்,
ஆதம்பாக்கம் கைங்கர்ய சபை,
நிலமங்கை நகர், ஆதம்பாக்கம்,
சென்னை - 600 088.
போன் - 2245 1461, 2245 0967

Printed by:
*Rohini Graphics*
Chennai 600 083.
H/P:94448 36008.

# சங்கல்பத்தின் விளக்கம்

நம்முடைய ஸனாதன தர்ம மதத்தில் ஸங்கல்பம் என்பது அனைத்து வர்ண / ஜாதியினருக்கும் பொதுவானது. பிள்ளையார் பூஜை முதல் சகல பூஜைகளிலும், நாம் பிறந்த உடன் செய்யும் ஜாத கர்மா முதல் இறந்தவுடன் செய்யும் பித்ருமேதம், பிரம்மமேதம்(அந்திய இஷ்டி) முதலிய உத்தரக்கிரியை வரையிலான அனைத்து கர்மாக்களையும் சங்கல்பம் செய்து கொண்டு ஆரம்பிக்கின்றோம்.

ஆவணி அவிட்டம் முதலான சில கர்மாக்களில் மிகவும் விசேஷமாக மஹா சங்கல்பம் செய்து கொள்வது சம்ப்ரதாயம். காசி, ராமேஸ்வரம் போன்ற புண்ணிய க்ஷேத்திரங்களில் ஸ்நான சங்கல்பம் சற்று விரிவாக சொல்லப்படுகிறது.

மேற்கண்ட சங்கல்பங்கள் மூலம் நாம் செய்யக் கூடாத பாபங்கள் எவை எனத் தெரிந்து கொள்ள முடிகிறது. தெரியாமல், தெரிந்து, செய்த பாவங்களுக்கும் ப்ராயச்சித்தம் செய்யவும் சங்கல்பம் மிக அவசியமாகிறது.

நாம் கர்மா செய்யும் பொழுது, நேரம் இன்மை காரணமாக சாஸ்திரிகளிடம் சங்கல்பத்தின் பொருளைத் தெரிந்து கொள்ள முடிவதில்லை. மேலும் சங்கல்பத்தில் வரும் திதி, வார, நக்ஷத்ர, யோக, கரணம் முதலியனவற்றை தினமும் பஞ்சாங்கத்தில் இருந்து தெரிந்து கொள்ளும் வழக்கம் பெரும்பாலானவர்களிடம் மறைந்து வருகிறது.

இதன் காரணமாக நாம் தினமும் ஸ்நானம், பூஜை முதலான கார்யங்களில் பொதுவாக செய்து வரும் சங்கல்பத்தினை அனைவரும் தெரிந்து கொள்ளும் வகையில் இங்கு சிறிது விளக்கப்படுகிறது.

# சங்கல்பம்

நான் ஒருமைப்பட்ட மனத்துடன் இந்த செயலை செய்கிறேன் என்று மனதை திடப்படுத்திக் கொள்வதுதான் ஸங்கல்பம் என்பதின் பொருள்.

முதலில் ஆசமனம் செய்த பிறகு, ப்ராணாயாமம் செய்து. **ममोपात्त समस्त दुरितक्षयद्वारा** மமோபாத்த ஸமஸ்த துரிதக்ஷயத்வாரா = நான் செய்த அனைத்துபாபங்களும் விலகுவதின் மூலம் **श्रीपरमेश्वरप्रीत्यर्थम्** ஸ்ரீபரமேஸ்வரப்ரீத்யர்த்தம் ஸ்ரீ பரமேஸ்வனின் ஸந்தோஷத்திற்காக **श्रीभगवदाज्ञया श्रीमन्नारायण प्रीत्यर्थम्** ஸ்ரீபகவதாக்ஞயா ஸ்ரீமந்நாராயண ப்ரீத்யர்த்தம் = ஸ்ரீபகவானின் கட்டளைப்படி ஸ்ரீமந்நாராயணனின் ஸந்தோஷத்திற்காக (**श्रीभगवत् कैङ्कर्यरूपम्**) ஸ்ரீபகவத்கைங்கர்யரூபம் = பகவானுக்கு ஸேவை செய்வது என்னும் வடிவில்

**शुभेदिने शोभनेमुहूर्ते अद्यब्रह्मण: द्वितीयेपरार्धे श्वेतवराहकल्पे वैवस्वत मन्वन्तरे अष्टाविंशति तमे कलौयुगे प्रथमे पादे जम्बू द्वीपे भारत वर्षे भरत खण्डे मेरो : दक्षिणे पार्श्वे सालीवाहन शकाब्दे अस्मिन् वर्तमाने व्यावहारिके प्रभवादीनां पष्टचा: सम्वथ्सरणां मध्ये पार्थिव नाम सम्वथ्सरे.....अयने,.....ऋतौ,.....मासे,....पक्षे,....शुभतिथौ, ..वासरयुक्तायां..नक्षत्रयुक्तायां..योग..करण.. एवङ्गुण विशेषण विशिष्टायां अस्यां...शुभ(पुण्य)तिथौ..आख्य कर्मकरिष्ये.**

ஸுபேதிநே ஸோபநேமுஹூர்த்தே (அத்ய)ப்ருஹ்மண: த்விதீயே பரார்த்தே ஸ்வேதவராஹ கல்பே வைவஸ்வத மன்வந்தரே அஷ்டா விம்ஸதி தமே கலௌயுகே ப்ரதமேபாதே ஜம்பூத்வீபேபாரதவர்ஷே பரத கண்டே மேரோ: தக்ஷிணேபார்ஸ்வே (சாலிவாஹன) ஸகாப்தே அஸ்மிந்வர்தமானே வ்யாவஹாரிகே ப்ரபவாதீனாம் ஷஷ்ட்யா: ஸமவத்ஸராணாம் மத்யே.... நாம ஸம்வத்ஸரே.. உத்தர (தக்ஷிண)

அயநே..ருதௌ .. மாஸே.. பக்ஷே.. திதௌ.. வாஸர யுக்தாயாம்.... நக்ஷத்ரயுக்தாயாம்... யோக ... கரண ஏவங்குண விசேஷண விசிஷ்டாயாம் அஸ்யாம் ... சுப(புண்ய) திதௌ..ஆக்ய கர்ம கரிஷ்யே

**शुभेदिने शोभनेमुहूर्ते** ஸுபே திநே ஸோபநே முஹூர்த்தே = சுபமான நாளில் மங்களமான நேரத்தில் **1. अद्य ब्रह्मण: द्वितीयेपरार्धे** (அத்ய) ப்ருஹ்மண: த்விதீயேபரார்த்தே = ப்ரம்ஹாவின் இரண்டாவது பரார்த்தத்தில், **2. श्वेतवराह कल्पे** ஸ்வேதவராஹ கல்பே = ஸ்வேதவராஹ கல்பத்தில் **3. वैवस्वत मन्वन्तरे** வைவஸ்வதமன்வந்தரே = வைவஸ்வதமன்வந்தரத்தில் **4. अष्टाविंशतितमे** அஷ்டாவிம்ஸதிதமே = 28வது சதுர்யுகத்தில் **5. कलौयुगेप्रथमेपादे** கலௌயுகே ப்ரதமேபாதே = கலியுகத்தின் முதல்பாதத்தில் **6. जम्बूद्वीपे** ஜம்பூ த்வீபே = ஜம்பூ த்வீபத்தில் **7. भारतवर्षे** பாரதவர்ஷே பரதகண்டே = பாரத வர்ஷத்தில் பரதகண்டத்தில் **8. मेरो : दक्षिणेपार्श्वे** மேரோ : தக்ஷிணேபார்ஸ்வே மேருவின் தென் திசையில் இருக்கும் இந்த இடத்தில் **9. शकाब्दे** ஸகாப்தே = சாலிவாஹனசகாப்தத்தில் **10. अस्मिन् वर्तमाने व्यावहारिके** அஸ்மிந் வர்தமானே வ்யாவஹாரிகே= இப்போழுது வழக்கத்தில் இருக்கும் **11. प्रभवादीनां षष्ट्या: सम्वथ्सराणां मध्ये** ப்ரபவாதீனாம் ஷஷ்ட்யா : ஸம்வத்ஸராணாம் மத்யே = ப்ரபவ முதலிய அறுபது வருஷங்களின் நடுவில் அமைந்துள்ள.. **नाम सम्वथ्सरे** நாமஸம்வத்ஸரே = என்னும் பெயருள்ள வருஷத்தில் **11. उत्तर (दक्षिण) अयने** ..உத்தர(தக்ஷிண) அயநே = இந்த அயனத்தில் **12.ऋतौ** ருதௌ= இந்தருதுவில் **13.मासे** மாஸே=இந்தமாஸத்தில் **14.पक्षे** பக்ஷே=இந்தபக்ஷத்தில் **15. शुभतिथौ** சுபதிதௌ= இன்ன திதியில் **16. वासर युक्तायां** வாஸர யுக்தாயாம் = இந்தகிழமையுடன் கூடிய **17. नक्षत्रयुक्तायां** நக்ஷத்ர யுக்தாயாம் = இந்த நக்ஷத்ரத்துடன் கூடிய **18.योग** யோக= இந்த யோகத்தில் **19. करण** கரண = இந்த கரணத்தில் இந்த சுபதினத்தில்

இன்ன கர்மா செய்கிறேன் என்று சங்கல்பம் செய்து கொள்கிறோம்.

மேலே சொல்லப்பட்ட தேசம் , காலம் இவைகளின் விவரங்களை சற்று விரிவாக தெரிந்து கொள்ள இங்கு விளக்கப்படுகிறது.

## த்விதீய பரார்தே

***1. இரண்டாவது பரார்த்தம் : -***

ப்ரம்ஹாவின் ஆயுள் 100 வருஷம் அதற்கு "பரம்" என்று பெயர். பரம் இரண்டு பாகமாகப் பிரிக்கப்பட்டு உள்ளது. அவைகளுக்கு **"பரார்த்தம்" என்று பெயர். தற்போது முதல் பாகம் முடிந்து** இரண்டாவது ( பாதி) பரார்த்தம் நடை பெறுகிறது. மனிதர்களுக்கு ஒரு வருடம் தேவர்களுக்கு ஒரு நாள். பூவுலக கணக்கின்படி 432 கோடி வருடங்கள் பிரம்மாவின் ஒரு தினம், பிரம்மாவின் ஆயுள் 360 தினங்களைக் கொண்ட 100 வருடங்கள். ஒரு தினம் முடிந்த நிலையில் சகல ஜீவராசிகளும் பூவுலக வாழ்க்கையின் முடிவை அடைகின்றன. அடுத்த தினத்தில் ப்ரம்மா தன் படைப்பை மீண்டும் துவங்குகிறார்.

**2. ச்வேத வராஹ கல்பம் :–**

ப்ரம்மாவின் ஒவ்வொரு பரார்த்தத்திலும் அநேக கல்பங்கள் ஏற்படுகின்றன. தற்போது நடப்பது ச்வேதவாரஹ கல்பம். பகவான் விஷ்ணு வெண்ணிறமான பன்றி ரூபத்தை எடுத்து பாதாளத்தில் இருந்து பூமியைக் கொண்டு வந்ததால் இப்பெயர் ஏற்பட்டது. க்ருதயுகம், த்ரேதாயுகம், த்வாபரயுகம், கலியுகம் ஆகிய நான்கு யுகங்கள் சேர்ந்தது ஒரு மஹா யுகம். இவ்வாறு 1000 மஹாயுகங்கள் சேர்ந்தது ஒரு கல்பம்.

**கல்பங்கன் மொத்தம் ஏழு அவை**

1. பார்த்திவ கல்பம் 2. கூர்ம கல்பம்

3. ப்ரளய கல்பம்
4. அனந்த கல்பம்
5. ப்ரம்ஹ கல்பம்
6. ஸாவித்ர கல்பம்.
7. ஸ்வேத வராஹ கல்பம்

**3. வைவஸ்வத மன்வந்திரே :–**

ப்ரம்ம தேவனின் ஒரு தினம் பதிநான்காகப் பிரிக்கப்படுகிறது. இந்த பிரிவு ஒவ்வொன்றும் ஒரு மன்வந்திரம் என்று அழைக்கப்படுகிறது. இந்த மன்வந்திரம் ஒவ்வொன்றும் ஒரு மநு- ப்ரஜாபதி (தெய்வத் தந்தையின்) கீழ் வருகிறது. இவ்வாறு பதி நான்கு மனுக்கள் உள்ளனர். ஒவ்வொரு மநுவிற்கும் ஒரு பெயர் உண்டு. அவை

1. ஸ்வாயம்புவ மநு
2. ஸ்வாரோசிஷ மநு
3. உத்தம மநு
4. தாமஸ மநு
5. ரைவத மநு
6. சாக்ஷுஷமநு
7. வைவஸ்வத மநு
8. ஸாவர்ணி மநு
9. தக்ஷஸாவர்ணி மநு
10. ப்ரம்ஹ ஸாவர்ணி மநு
11. தர்மஸாவர்ணி மநு
12. ருத்ரஸாவர்ணி மநு
13. தேவஸாவர்ணி மநு
14. இந்த்ரஸாவர்ணி மநு

தற்போது வைவஸ்வத மநுவின் ஆட்சி நடை பெறுகிறது.
இவர் ஏழாவது மநு.

ஒவ்வொரு மன்வந்தரமும் 71 மஹாயுகங்களைக் கொண்டவை. 14 மநுக்களின் கீழ் 14 X 71 =994 மஹாயுகங்கள் போக, 6 மஹாயுகங்கள் ஒரு மன்வந்தரம் முடிந்து மற்றொன்று ஆரம்பமாகிற காலம்.

நான்கு யுகங்களைக் கொண்டது ஒரு மஹாயுகம்.

चत्वार्याहुः सहस्राणि वर्षाणां तु कृतं युगम् ।
तस्य तावच्छती संध्या संध्यांशश्च तथाविध : ॥

–மனு 1ல் 69–72

"தேவ வருஷம் 4000 கொண்டது கிருதயுகம் அதற்கு மேற்படி வருஷம் 400 கொண்டது ஸந்தி என்று சொல்லப்பட்ட விடியற்காலம். அப்படி 400 கொண்டது ஸந்தியாம்சம் என்று சொல்லப்பட்ட அஸ்தமான காலம். ஆக 4800 தேவ வருஷத்திற்கு மனித வர்ஷம் 1728000".

| | | |
|---|---|---|
| 1. க்ருதயுகம் | 17,28,000 | வருஷங்கள் |
| 2. த்ரேதாயுகம் | 12,96,000 | வருஷங்கள் |
| 3. த்வாபரயுகம் | 8,64,000 | வருஷங்கள் |
| 4. கலியுகம் | 4,32,000 | வருஷங்கள் |
| | 43,20,000 | வருஷங்கள் |

நான்கு யுகங்களும் சேர்ந்து 43,20,000 வருடங்கள் கொண்டது (ஒரு சதுர்யுகம்)ஒரு மஹாயுகம். மீண்டும் மீண்டும் வருபவை.

**4. அஷ்டாவிகும் சதிதமே :—**

தற்போது நடைபெறும் வைவஸ்வத மநுவின் காலத்தில் 27 சதுர்யுகங்கள் சென்று 28 ஆவது சதுர்யுகம் நடைபெறுகிறது.

**5. கலியுகே, ப்ரதமே பாதே :—**

கலியுகத்தின் முதல் பாதத்தில் என்பது இதன் பொருள். மனிதர்களுக்கு ஒரு வருஷம் தேவர்களுக்கு ஒரு நாள். இந்த 28வது சதுர்யுகத்தில் க்ருதயுகம். த்ரேதாயுகம், த்வாபரயுகம் ஆகிய மூன்று யுகங்கள் சென்று தற்போது நான்காவது யுகமாகிய கலியுகம் நடக்கிறது. இந்த கலியுகம்4,32,000 வருடங்கள் உடையது. இதில் தற்போது 5107வது வருஷம் நடை பெறுகிறது.

**6. ஜம்பூத்வீபே :–**

த்வீபம் என்னும் சொல்லுக்கு தீவு என்று பொருள். நம் சாஸ்த்ர முறைப்படி பூமி 7 த்வீபங்களாக ( பிரிவுகளாக) பிரிக்கப்பட்டு உள்ளது. அவைகளின் பெயர் முறையே ஜம்பூத்வீபம், ப்லக்ஷத்வீபம், சால்மலித்வீபம், குசத்வீபம், க்ரௌஞ்சத்வீபம், சாகாத்வீபம், புஷ்கரத்வீபம் என்பன. இவற்றில் நாமிருப்பது ஜம்பூத்வீபம் என்று சொல்லப்படுகிறது.

ஸ்ரீமத் பாகவத புராணத்தில் ஐந்தாவது பகுதியிலும், ஸ்ரீமத் நாராயணீயத்தில் 21வது அத்யாயத்திலும் பின் வருவன போன்று பூகோள வர்ணனை ஸ்ரீ சுகமுனிவர் விரிவாக பரீக்ஷித்து மஹாராஜனுக்கு விளக்குவதாகக் கூறப்படுகிறது. "த்வீபங்களில் மிகவும் சிறப்பு வாய்ந்தது ஜம்பூத்வீபம். இது லக்ஷயோஜனை விஸ்தீரணம் (பரப்பு) உடையது (ஒரு யோஜனை என்பது சுமாராக 12.8 கி.மி. தூரமாகும்), இதில் ஒன்பது கண்டங்கள் உள்ளன. ஒவ்வொன்றும் 9000 யோஜனை பரப்பளவு உடையது. ஒவ்வொரு கண்டத்தின் எல்லையையும் பிரித்துக் காட்ட மலைப்பகுதிகள் உள்ளன. அதில் முக்கியமானது "மேரு மலை".

தற்போது 'ஆசியா' கண்டம் என்று கூறப்படுவதே ஜம்பூத்வீபம் என்ற ஒரு கருத்தும் நிலவுகிறது.

**7. பாரத வர்ஷே பரத கண்டே : –**

**வர்ஷம் என்ற சொல்லுக்கு தேசம் என்றும் பொருள் உண்டு.**

நாமிருக்கும் ஜம்பூத்வீபம் ஒன்பது வர்ஷங்களாகப் (பிரிவுகளாக) பிரிக்கப்பட்டு உள்ளது. அவை நாபி வர்ஷம், சிம்புருஷ வர்ஷம், ஹிரண்யக வர்ஷம், குரு வர்ஷம், பத்ராச்வ வர்ஷம், கேதுமால வர்ஷம் என்பன.

(ஒன்பது கண்டங்களின் நடுவில் இருப்பது இலாவ்ருத கண்டம். இலாவ்ருத கண்டத்திற்குத் தெற்கில் : நிஷதம், ஹேம கூடம், இமயம்போன்ற மலைகளும், மேல்பாகத்தில்-மால்யவான், கீழ்பாகத்தில் - கந்த மாதன பர்வதமும் எல்லைகளாக அமைந்துள்ளன.

மேரு மலைக்கு ஒரு புறத்தில் மந்திர மலை இருக்கிறது. மற்றொரு புறம் பிரம்ம தேவனின் நகரமான சாதகௌம்பி உள்ளது. அதைச் சுற்றி எட்டு திசைகளிலும் இந்திரன் முதலான அஷ்டதிக் பாலகர்களின் நகரங்கள் உள்ளன.

இந்தப் பூமண்டலத்திலுள்ள ஒன்பது கண்டங்களில் பாரத பூமியே "கர்ம பூமி"யாகும். மற்றவை போகபூமிகள்).

-ஸ்ரீமத் பாகவதம் 5ம் பகுதி.

இவற்றில் முதலில் வரும் நாபி வர்ஷமே பரத மஹாராஜனின் பெயரால் பிறகு பாரத வர்ஷம் என்னும் பெயரை அடைந்தது. அதன் ஒரு பாகமே பரத கண்டம்.

**கண்டங்கள் ஒன்பது உள்ளன. அவை**

**1. இந்திர கண்டம் 2.கஸேரு கண்டம் 3. தாம்ர கண்டம் 4. கபஸ்தி கண்டம் 5. புன்னாக கண்டம் 6. கந்தர்வ கண்டம் 7. ஸௌம்ய கண்டம் 8. வருண கண்டம் 9. பரத கண்டம் என்பன.**

**8. மேரோ : தக்ஷிணே பார்ச்வே :–**

ஜம்பூத்வீபத்தின் மத்தியில் மேரு பர்வதம் ( மலை) இருப்பதாகச் சொல்லப்படுகிறது. இப்போது நாமிருக்கும் இடம் மேரு பர்வதத்திற்குத் தெற்கில் இருப்பதாகச் சொல்லப்படுகிறது.

**9. சாலிவாஹன சகாப்தே:—**சகாப்தங்கள் ஏழு. அவை

1. யுதிஷ்டிர சகாப்தம் 2. விக்ரம ஸகாப்தம் 3. ஸாலிவாஹண சகாப்தம் 4. விஜய சகாப்தம் 5. அபிநந்தன சகாப்தம் 6. நாகார்ஜுன சகாப்தம் 7. கலிசகாப்தம் ஆகியன.

இவற்றில் ஒவ்வொரு இடத்தில் ஒவ்வொரு விதமான சகாப்தம் இருக்கின்றன. அதில் தற்போது நடப்பது 1927வது வர்ஷம்.

சாலிவாஹனன் என்கின்ற அரசனின் பெயரால் இந்த சகாப்தம் வழங்கப்படுகிறது.

**10. அஸ்மின் வர்தமானே வ்யாவஹாரிகே ப்ரபவாதி ஷஷ்ட்யா: சம்வத்ஸராணாம் மத்யே :—**

இப்பொழுது வழகத்திலிருக்கும் ப்ரபவ, விபவ என்பன போன்ற 60வது வருடங்களுக்கு நடுவில் உள்ள இந்த வருடத்தில் என்பது இதன் பொருள். 12 மாதங்களை உடையது ஒரு வருடம் என வேதம் "த்வாதச மாசாஸ் ஸம்வத்ஸர:" என்று கூறுகிறது. மேற்சொன்ன ப்ரபவ முதலான 60 வருடங்களும் திரும்பவும் வருபவை.

**11. உத்திராயணே / தக்ஷிணாயணே :**

உத்திராயணம் / தக்ஷிணாயனம் என்ற இரண்டு அயனங்களைக் கொண்டது ஒரு வருஷம். அயனம் என்ற சம்க்ருத சொல்லுக்கு வழி என்று பொருள்.

சூர்யன் தைமாதம் முதல் ஆனி மாதம் முடிய ஆறு மாதங்கள் வடக்கு (வழி) நோக்கி நகர்வதற்கு உத்திராயணம் என்றும்.

சூர்யன் ஆடி மாதம் முதல் மார்கழி மாதம் வரை தெற்கு (வழி) நோக்கி நகர்வதற்கு தக்ஷிணாயனம் என்று பெயர்.

**12. ருதைவ :-**

ருது என்பது பருவங்களைக் குறிக்கும் சொல். இரண்டு மாதங்களுக்கு ஒரு ருதுவாக ஆறு ருதுக்களைக் கொண்டது ஒரு வர்ஷம்.

யஜுர் வேதம் இரண்டு மாதங்களுக்கான ருதுவையும் கீழே வருவன போன்று கூறியுள்ளது.

1. மதுச்ச மாதவச்ச - வாசந்திகாருது
2. சுக்ரச்ச சுசிச்ச - க்ரீஷ்மாருது
3. நபச்ச நபஸ்யச்ச - வாருஷிகாருது
4. இஷச்ச ஊர்ஜச்ச - சாரதாருது
5. சஹச்ச சஹஸ்யச்ச - ஹைமந்திகாருது
6. தபச்ச தபஸ்யச்ச - சைசிராருது

மேலும் ஏகாக்னி காண்டம் என்னும் பகுதியில் ''ஷட்ருதுப்யோ விஷ்ணுஸ்தான் வேது'' என்றும் ஆறு ருதுக்களைப் பற்றி கூறுகிறது.

அவை :

1. வசந்த ருது
2. க்ரீஷ்ம ருது
3. வர்ஷ ருது
4. சரத் ருது
5. ஹேமந்த ருது
6. சிசிர ருது

என்பனவாகும்.

**13. மாஸே :-**

30 நாட்களைக் கொண்டது ஒரு மாதம். தமிழ் மாதங்களில் சில

வருடங்களில் வைகாசி, ஆனி, ஆடி ஆகிய ஏதாவது ஒரு மாதத்தில் 32 நாட்களும், கார்த்திகை, மார்கழி, தை ஆகிய ஏதாவது ஒரு மாதத்தில் 29 நாட்களும் வரும். இது சௌரமான கணக்கில் வருகிறது. சித்திரை, வைகாசி, ஆனி முதலான மாதங்கள் சௌரமானம் எனவும், இவைகளுக்கு சாந்திரமான ரீதியாக சைத்ரம், வைசாகம், ஜேஷ்டம் எனவும் பெயர்.

சூரியன் பிரவேசிக்கும் ராசிகளின் அடிப்படையில் சௌரமான மாதங்களும், சந்திரன் பிரவேசிக்கும் நக்ஷத்ரங்களின் பெயர்களின் அடிப்படையில் சாந்திரமான மாதங்களும் வருகின்றன.

சாந்திரமான மாதம் அமாவசையின் மறு நாளில் இருந்து அடுத்த அமாவாசை வரையில் ஒரு மாதம் என கணக்கிடப்படுகிறது.

யஜுர் வேதத்தில் மாதங்களின் பெயர்

1. சித்திரை, வைகாசி - மது: மாதவ:
2. ஆனி, ஆடி - சுக்ர: சுசி:
3. ஆவணி, புரட்டாசி - நப: நபஸ்ய:
4. ஐப்பசி, கார்த்திகை - இஷ: ஊர்ஜ:
5. மார்கழி, தை - சஹ:, சஹஸ்ய:
6. மாசி, பங்குனி - தப: தபஸ்ய:

எனவும் கூறப்பட்டுள்ளன.

வேறு சில மாதக் கணக்குகளும் நம் தேசத்தில் பின்பற்றப் படுகின்றன. அவை

1. ப்ராம்ஹ மானம் 2. தைவமானம் 3. பித்ரிய மானம்
4. ப்ராஜாபத்யமானம் 5. பார்ஹஸ்பத்யமானம் 6. ஸௌரமானம்
7. சாந்திரமானம் 8. சாவனமானம் 9. நாக்ஷத்ரமானம்

போன்றவை.

விந்திய மலைக்கு வடக்கில் (வடதேசத்தில்) பார்ஹஸ்பத்ய மானம் (குரு-வியாழனின் கதியினைக் கொண்டு கணக்கிடும் முறை) வழக்கத்தில் உள்ளது.

**14. சுக்ல / க்ருஷ்ண பக்ஷே:–**

15ந்து (திதி) நாட்களைக் கொண்டது ஒரு பக்ஷம். ஒரு மாதத்திற்கு இரண்டு பக்ஷங்கள் வருகின்றன. அவை

1. அமாவசைக்குப்பின் வரும் நாட்கள் சுக்ல பக்ஷம் என்றும்
2.பௌர்ணமிக்குப்பின் வரும் நாட்கள் கிருஷ்ணபக்ஷம் என்றும் அழைக்கப்படுகின்றன.

**15. திதை –**

ஒவ்வொரு பக்ஷத்திற்கும் ப்ரதமை, த்விதியை முதலான 15 திதிகள் உண்டு.

ஒவ்வொரு நாளும் சந்திரன் ஆகாய வீதியில் செல்லும் தூரத்தில் இருந்து ஸூர்யன் செல்லும் தூரத்தைக் கழிக்க வரும் மிகுதியே திதி எனப்படுகிறது.

**16. வாஸரா : –**

நவக்ரஹங்களில் ராஹுவையும்,கேதுவையும் தவிர மற்ற 7 க்ரஹங்களுக்கும் ப்ரதிதினம் ஆக்ஷி முஹூர்த்தங்கள் மாறிக் கொண்டே வருகின்றன. அப்படி வருவதில் எந்த தினத்தில் ஸூர்யோதய காலத்தில் யாருடைய ஆக்ஷி இருக்கின்றதோ அந்த க்ரஹத்தின் பெயர் அந்த வாரத்திற்கு கொடுக்கப்பட்டிருக்கிறது. அவை பானு, இந்து (ஞாயிறு,திங்கள்) போன்றவை.

**17. நக்ஷத்ர யுக்தாயாம் :–**

பூமியிலிருந்து பார்ப்பவர்களால் எந்த தினத்தில் எந்த நக்ஷத்திரத்திற்கு சமீபமாக சந்திரன் பார்க்கப் படுகிறானோ, அந்த தினத்தில் அந்த நக்ஷத்ரம் என்று சொல்லப்படுகிறது.

நக்ஷத்ரங்கள் இருபத்தி ஏழு அவை அசுவனி, பரணி முதல் ரேவதி வரையிலானவை ஆகும்.

**18. யோகம் :–**

ஒவ்வொரு நாளும் ஸூர்யன் செல்லும் கதியுடன் (தூரத்துடன்) சந்திரன் செல்லும் கதியினைக் கூட்டி வந்த தொகை யோகம் எனப்படும். விஷ்கும்பம் முதல் வைதிரிதி முடிய இவையும் நக்ஷத்திரங்களைப் போல் 27 ஆகும்.

இவைகளில் சுப யோகம் என்னும் ஒரு யோகமும் உள்ளது. தினமும் சுபயோகம் என்று சொல்லக் கூடாது. அன்று எந்த யோகம் உள்ளதோ அதன் பெயரைத் தான் சொல்ல வேண்டும்.

மேற்கண்ட யோகங்களுக்கும் அமிர்த, சித்த, மரண யோகங்களுக்கும் சம்பந்தம் இல்லை. இவை வேறு.

**19. கரணம்:–**

ஒவ்வொரு திதியையும் இரண்டாகப் பிரித்தால் ஒவ்வொரு பாதிக்கும் ஓரு கரணம் வருகிறது. அவை ஸ்திர கரணங்கள் நான்கும், சரகரணங்கள் ஏழும் சேர்த்து மொத்தம் 11 கரணங்கள் ஆகும்.

**ஸ்திர கரணங்கள் : –** அமாவசை அன்று முதல் 30 நாழிகை சதுஷ்பாதகரணம் என்றும் பின் 30 நாழிகை நாகவகரணம் என்றும், சுக்லபக்ஷப்ரதமை அன்று முதல் 30 நாழிகை கிம்ஸ்துக்ன கரணம் என்றும்,கிருஷ்ண பக்ஷ சதுர்தசி அன்று பிந்திய 30 நாழிகை சகுனி கரணம் என்றும் வழங்கப்படுகிறது.

**சர கரணங்கள் :–** பவம், பாலவம், கௌலவம், தைதுலம், கரஜம், வணிஜை, பத்ரம் இவை ஏழும் சரகரணங்கள் ஆகும். இவை அனைத்து திதிகளிலும் மாறி மாறி வருபவை.

கரணங்களில் சுப கரணம் என்று ஒன்று இல்லாததினால் நாம் அன்று என்ன கரணம் என்று பஞ்சாங்கத்தில் பார்த்து தெரிந்து கொண்டு சரியாகச் சொல்ல வேண்டும். சில யோகங்களும், சில கரணங்களும் நல்ல கார்யங்களுக்கு விலக்கப்பட்டுள்ளன.

திதி, வாரம், நக்ஷத்ரம், யோகம், கரணம் இவை ஐந்தும் சேர்ந்ததே பஞ்சாங்கம் என்று பெயர்.

**திதே : ஶ்ரீயமவாப்நோதி**
வாராத் ஆயுஷ்ய வர்தநம் I
நக்ஷத்ராத் தரதே பாபம்
யோகாத் ரோக மோசனம் II
**கரணாத் கார்யசித்திஸ்ச**
பஞ்சாங்க பல முச்யதே II

**மேற் கண்ட ஶ்லோகத்தின் படி** ஒவ்வொரு நாளும் திதியை அறிந்து சொல்வதனால் செல்வம் பெருகும். வாரத்தைச் சொல்வதனால் ஆயுள் வளரும், நக்ஷத்ரத்தை சொல்வதனால் பாவம் விலகுகிறது. யோகத்தைச் சொல்வதனால் ரோகம் அகலுகிறது. கரணத்தைச் சொல்வதனால் காரியத்தில் வெற்றி ஏற்படுகிறது.

இவையே நாம் தினமும் செய்யும் சங்கல்பத்தினால் ஏற்படும் பஞ்சாங்க பலன்.

முடிந்த வரை நாம் செய்யப் போகும் கர்மாக்களில் மந்திரங்களின் பொருளை நன்கு தெரிந்து கொண்டு செய்வதினால் அதிக பலனை அடையலாம் என்பது ருஷிகளின் கருத்து.

**சுபம்**

